egistered No. M. 2330 'SIDDHANTHAM
Vol. 30 – No. 5



# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 30 | ஹேவிளம்பி வைகாசி 1957 மே | இதழ் 5

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்.
உதவிப் பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், பி.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்
2, சீதாராம நகர், கடலூர் N. T.

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## சமாஜ அறிக்கைகள்

1. சமாஜ சம்பந்தமான கடிதங்கள் முதலியவற்றைத் திரு. கோ. மு. முத்துசாமி, 17/24, அப்பு முதலி தெரு, கிராமணி தோட்டம், மயிலாப்பூர், சென்னை–4 என்ற முகவரிக்கு எழுதுதல் நலம்.

2. ஞானியார் சுவாமிகள் என வழங்கிய ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் (5-வது பட்டம்) தம் வாழ்நாளில் பல இடங்களில் ஆற்றிய சொற்பொழிவுகளை 16 பக்கங்கள் வீதம் ஜூன் மீ முதல் "சித்தாந்தத்தில்" தொடர்ந்து வெளியிடவும், அவைகளைப் புத்தகமாக அச்சிட்டு ஞானியார் சுவாமிகள் நினைவு மலராக வெளியிடவும் சமாஜத்தினர் முடிவு செய்துள்ளனர். அவரது சொற்பொழிவுகளைக் குறிப்பெடுத்து வைத்துள்ள அன்பர்கள் தயவுசெய்து விரைவில் அவைகளைத் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார், 150, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-1 என்ற முகவரிக்கு அனுப்பி உதவ வேண்டப்படுகிறார்கள்.

——

## செய்தித் திரட்டு

9—4—57. கோவை உக்கடம் மாகாளியம்மன் கோயில் திருவிழாவின் அங்கமாக ஒன்பது நாட்கள் பல அறிஞர்கள் அரிய சமயச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார்கள். பல்லாயிரக்கணக்கான மக்கள் கேட்டு மகிழ்ந்தனர். இச் சொற்பொழிவுகள் படியாத மக்களுக்கும் பாட்டாளி மக்களுக்கும் மிகவும் பயன் தந்தன.

22—4—57. திருவாசகச் சொற்பொழிவு, சன்மார்க்க சங்கம், கோவை:—கோவையில் இரண்டு நாட்களாக நன்கு நடைபெற்ற கம்பர் விழாவிற்கு வந்திருந்த திரு. ராய. சொக்கலிங்கம் அவர்களும், சா. கணேசன் அவர்களும் திருவாசகத்தின் பெருமையை வெகு திறமையுடன் விளக்கினார்கள். மிக அரிய கருத்துக்களை வெளியிட்டார்கள்.

24—4—57. பழனிக்கோயில் வழிபாடு. கணக்கற்ற தடவை மக்கள் பழனிக்குச் சென்று வழிபட்டிருப்பார்கள். ஆனால் சந்தடியைக் கண்டு சஞ்சலப்பட்டுத் திரும்புவார்கள். இன்று ஆசிரியர் சென்றபோது நல்லமுறையில் ஒரு மாறுதலைக் கண்டார். காலை 9 மணி வரை கோயிலார் வழிபாடும், 9 மணி முதல் மாலை 5 மணி வரையில் தனி மக்

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 30 | ஹேவிளம்பி வைகாசி 1957 மே | இதழ் 5

## சமயப் பொறை

[ஆசிரியர்]

தமிழ்நாட்டு வரலாற்றில் சமயத்தைப் பொறுத்தமட்டில் அரசனைப் பின்பற்றியே பெரும்பான்மையான குடிகள் சமய ஈடுபாடு கொண்டிருக்கக் காண்கிறோம். அரசனும் அவன் காலத்துச் சமயப் பெரியார்களைப் பின்பற்றி நடப்பான். அவர்களுடைய போதனைகளுக்கு இணங்கச் சமய நிலையங்களையும் உண்டு செய்து பாதுகாத்து வந்தான். பொதுமக்கள் அந்த நிலையங்களைப் போற்றி வரலானார்கள். பல்லவர் காலத்திலும் பாண்டியர் காலத்திலும் மகேந்திரனும் கூன்பாண்டியனும் சமணர்களாக இருந்தார்கள். ஆனால் அப்பர் சுவாமிகளாலும் சம்பந்தர் பெருமானாலும் அம்மன்னர்கள் சைவத்திற்குத் திரும்பப்பட்டப் பொதுமக்களும் சைவர்கள் ஆனார்கள். சோழர்கள் காலத்தில் இராசராசனும் இராசேந்திரனும் பெரிய சிவாலயங்களைக் கட்டி மக்களைச் சைவத்தில் ஈடுபடச் செய்தனர். இராசேந்திரன் சைவக் கோயில்களைக் கட்டினபோதிலும் நாகப்பட்டினத்தில் புத்தர் கோயிலுக்கு நிலதானம் செய்திருக்கிறான். வைஷ்ணவாலயத்திற்கும் தருமம் செய்திருக்கிறான். ஆகவே அவன் சமயப் பொறை கொண்டவன் என்பர். அப்படிப் பட்டவன் காலத்தில் மக்களும் எந்தச் சமயத்தையும் மேற்கொண்டு வாழலாம். இந்த முறை பல அரசர் காலங்களிலும் இருந்தது.

முகம்மதியர் இந்து நாட்டைப் பிடித்து ஆண்ட காலத்தில் தங்கள் சமயத்தை நாட்டில் புகுத்தத் தொடங்கினர்.

வடநாட்டில் பல வகையிலும் அவர்கள் தங்கள் மதத்தை உட்புகுத்தினர்கள். இந்துக்களின் கோயில்களை இடித்துத் தள்ளியும், ஒத்துக் கொள்ளாதவர்களைக் கத்திக் கிரை ஆக்கியும், தங்கள் மதத்தைத் தழுவினவர்களுக்கு உதவிகள் புரிந்தும் மதப் பரப்பினை மேற்கொண்டார்கள். அப்படியிருந்தும் சில மாகாணங்களைத் தவிர எல்லாப் பாகங்களையும் முகம்மதியம் ஆக்க முடியவில்லை. தென்னிந்தியாவிலோ அனேக நூற்றுண்டுகள் வரை முகம்மதியர்களைத் தெற்கே வரவொட்டாமல் விசய நகரப் பேரரசு இந்துக்களைப் பாது காத்து வந்தது. இறுதியில் தலைக்கோட்டைப் போரில் விஜயநகரம் அழிந்து போகப் பின்னரே முகம்மதியர் தெற்கே வந்தார்கள். ஆனல் தமிழ் நாட்டில் கிழக்குப் பகுதியில் ஓரிரண்டு நூற்றுண்டுகள் மட்டும் அவர்கள் ஆட்சி புரிந்தார்களே யன்றிப் பெரும்பாகங்களில் இந்து அரசர்களே ஆட்சி புரிந்தார்கள். அந்தக் காரணத்தினலே முகம்மதிய மதம் தெற்கே பரவவில்லை. அதுபோலவே மராட்டிய நாட்டிலும் கன்னடத்திலும் முகம்மதிய மதம் மிகவாகப் பரவவே யில்லை.

இப்படியிருக்க ஐரோப்பாவிலிருந்து கிறிஸ்து மதத்தினர் இந்தியாவிற்கு முதலில் வாணிபம் செய்ய வந்த பிறகு நாட்டைக் கைப்பற்றி ஆளத் தொடங்கினர். அவர்களோடு கிறிஸ்துவப் பாதிரிமார்களும் இந்தியாவிற்கு வந்து தங்கள் மதத்தைப்பரப்பத் தொடங்கினர்கள். போர்த்துகீசியர் வந்த போது அவர்கள் முகம்மதியர்போலக் குடிகளைப் பலவகைகளில் பலவந்தப்படுத்திக் கிறிஸ்துவர்கள் ஆக்கினர்கள். ஆங்கிலேயர் வந்தபோது அத்தனைப் பலவந்தம் இல்லை. தாழ்ந்த வகுப்பினர்களை மட்டும் பாதிரிமார்கள் கிறிஸ்தவத்திற்குள் புகுத்தினர்கள். மேல்வகுப்பார்களும் படித்தவர்களும் மத மாறுதலுக்கு உட்படவில்லை. ஆங்கில அரசியலாரும் இந்த மாறுதலுக்குத் தகுந்த ஆதரவு தரவில்லை. பாதிரிகள் தங்கள் நாடுகளிலிருந்து பணம் கொண்டுவந்து ஆலயங்களைக் கட்டிப் பள்ளிகளையும் மருத்துவச்சாலைகளையும் ஏற்படுத்திக் கிறிஸ்தவத்தைப் பரப்பினர்கள் என்றாலும் மத மாறுதல் மிக நிதானமாகவே நடைபெற்றது. இருநூறு ஆண்டுகளாகப் பல வகைகளில் மண், பெண், பொன் கொடுத்துப் பார்த்தும் அவர்களின் முயற்சி தக்க பலன் அளிக்கவில்லை.

காரணம் என்னவெனில் ஏற்கெனவேநாட்டில் தழுவப் பட்டிருந்த இந்து சமயமும் அதன் பல பிரிவுகளும் மிக உயர்ந்த கோட்பாடுகளைக் கொண்டு இருந்ததுவே ஆகும். படித்த மக்கள் புதிதாக வந்துகொண்டு இருக்கும் கிறிஸ்தவத்தில் மேன்மை காணவில்லை. போதிக்கவந்த பாதிரிமார்களும் இந்து சமயக் கொள்கைகளை மறுக்க முடியவில்லை. உதாரணமாக, சைவ சமய நூல்களான திருவாசகம் சிவ ஞானபோதம் இவைகளைப் படித்து அவற்றில் இருந்த மேன்மைகளை அறிந்து தங்கள் மொழிகளிலே மொழி பெயர்த்தும் கொண்டார்கள். மேலும் அவைகளைப்பற்றி எழுதும் போது எல்லாம் அவைகளை மிக அன்புடனே போற்றியும் வந்தார்கள். ஆகவே படித்த மக்களிடையில் கிறித்தவம் பரவவில்லை. ஆனல் படிப்பும் சமய அறிவும் இல்லாத பாமர மக்களிடமும் காட்டுமக்களிடமும் அவர்கள் பேச்சு ஏறிற்று. அவர்களில் பலபேர் கிறிஸ்தவர்கள் ஆகிவிட்டார்கள். இந்த வகையில் மாறினவர்களும் மிகக் குறைந்த பேர்களே ஆவார்கள். இந்தநிலை ஆங்கிலேயர்கள் நம்மை விட்டுப் போனபோது இருந்தது.

பாரதநாட்டில் தன்னுரிமை வந்தது. நாடு குடியரசு ஆயிற்று. நம்மை நாமே ஆளும் மேன்மை கிடைத்தது. நமக்கு என்று ஒரு அரசியல் திட்டமும் வகுக்கப்பட்டது. அதில் அரசியலுக்கும் சமயங்களுக்கும் தொடர்பு கூடாது என்று வரையப்பட்டது; யார் வேண்டுமானலும் எந்த சமயத்தையும் ஏற்றுக்கொள்ளலாம். அரசியல் அதனைத் தடுக்காது; அரசியல் சமயப் பற்றற்றது என விதித்தார்கள். உடனே சமய உலகத்தில் ஒரு பெரும் மாறுதல் தோன்றிற்று. சுயநலம் பொருந்திய மதப் பித்தர்கள் இது நல்ல சமயம் என்று மகிழ்ந்தார்கள். மேல்நாடுகளிலிருந்து ஆயிரக்கணக்கில் பாதிரிமார்கள் இந்தியாவிற்குள் புகுந்தார்கள். வரும்போது பெரும் பணங்களையும் கொண்டு வந்தார்கள். கோயில்கள் மருத்துவசாலைகள், பள்ளிக் கூடங்கள் முதலியவைகளை ஏற்படுத்தி மக்களைத் தம் சமயத்தில் சேர்க்கத் தொடங்கினர்கள். சமயத்தின் பேராலே செல்வாக்கைப் பெற்று அரசியலிலும் வாலாட்டத் தொடங்குகிருர்கள். இல்லாவிடில் அமெரிக்கர்களுக்கு

இந்தியாவில் கோடிக்கணக்கில் செலவழிக்க என்ன நோக்கம் ? கூறவும்வேண்டுமா ?

தமிழ்நாட்டில் மேல்நாட்டுப் பாதிரிகளால் மிகுந்த துன்புறுத்தல் செய்ய முடியவில்லை. ஏனெனில் ஏற்கனவே இருந்த சைவ சித்தாந்தம் மிக மேன்மையானது. அதனை ஒரு சிறிதும் அப்பாதிரிகளால் அசைக்கக்கூடவில்லை. ஆனாலும் நமது நாட்டுக் கிறிஸ்தவர்களைக் கொண்டே ஒரு சிறிது மத மாற்றல் பணியைச் செய்து வருகிறார்கள். வாழைப்பழத்தில் ஊசி இறக்குவதைப் போன்ற இரகசிய வேலைகளைச் செய்து வருகிறார்கள். அவ்வேலைகளும் நல்ல பலனைத் தரவில்லை. ஆனல் நடு நாடாகிய மத்தியப் பிரதேசம் வடகிழக்கு நாடாகிய ஆசாம் முதலிய பிரதேசங்களில் அவர்களுடைய வேலை மும்முரமாக நடந்து வருகின்றது. அந்நாடுகளில் தாழ்ந்த வகுப்பார்களும் ஆதிவாசிகளும் மிகவும் உண்டு. அவர்களை மேல் வகுப்பார்கள் கவனிக்கவில்லை. ஆகவே பாதிரிமார்கள் அவர்களுக்குள் புகுந்து, ஆயிரக்கணக்கில் கிறிஸ்தவர்கள் ஆக்குகின்றனர். மத மாற்றத்தினல் மிகுந்த நஷ்டம் இல்லை. அவர்களுடைய நடையுடை பாவனை மனப்போக்கு முதலியவைகளையே மாற்றி விடுகிறார்கள். மதம் மாறின ஆதிவாசிகளில் நாட்டுப் பற்று போய்விடுகிறது. வெளிநாட்டுப் பற்றே புகுகின்றது. ஆகவே பொதுவாக நமது பாரதத்தில் பெரும் பிளவு ஏற்படும். இதனை நாகர் மலைச்சாதிகளில் காண்கிறோம். அவர்களில் ஏற்பட்டிருக்கும் அரசியல் புரட்சி யாரால் தூண்டப்பட்டது என்று கூறவும் வேண்டும். பர்மா நாட்டில் கரேன்களில் ஏற்பட்டிருக்கும் கலகம் போன்றே இந்தப் பிரதேசங்களிலும் ஏற்பட்டிருக்கின்றன.

இந்தச் சங்கடமான நிலையைக் கண்டு சில பெரியோர்கள் மத்தியப் பிரதேசத்துச் சட்டசபையில் வாதித்தார்கள். அதன் காரணமாக ஒரு விசாரணைக் குழு நியமிக்கப்பட்டது. அதற்கு ஒரு உயர்நீதிமன்றத்துத் தலைமை நீதிபதியைத் தலைவையாக நியமித்தார்கள். அந்தக் குழு வெகு இடங்களுக்குச் சென்று வெகு மக்களை விசாரித்துக் கணக்கற்ற சாசனங்களைப் பரிசோதித்து ஒரு அறிக்கை வெளியிட்டார்கள். அதிலே வெளிநாட்டுப் பாதிரிமார்கள் செய்து வரும் இரகசிய வேலைகள் வெளியாயின. அவர்கள்

கையாண்ட அநீதி முறைகளும் வெளியாயின. வெளிநாட்டுப் பணங்களின் வருவாய்களும் தெரிந்தன. மக்களில் ஒரே கலவரம் ஏற்பட்டது. வெளிநாட்டு இலஞ்சப்பணம் வரக்கூடாது என்றும், சம்மதமின்றி மதமாற்றம் செய்யக்கூடாதென்றும் முடிவான பல தீர்மானங்கள் அதில் கூறப்பட்டுள்ளன. இந்த அறிக்கையைக் கண்டவுடனே கிறிஸ்து பாதிரிகளுக்கும் அவர்களுடைய சீடர்களுக்கும் பெரும் கோபம் வந்தது. அதனை எதிர்த்துச் சபைகள் கூட்டித் தீர்மானங்களை நிறைவேற்றினார்கள்.

அதில்கண்ட சில குறிப்புக்களை இங்கே தருவாம். 1950 ஜனவரி முதல் 1954 ஜுன் வரையில் இந்தியாவிற்கு வந்த வெளிநாட்டுப் பணம் 29 கோடி 27 லட்சம் ரூபாய்கள். அவைகளின் விவரம் :

| | |
|---|---|
| அமெரிக்கா | 20,68,63,000 |
| கானடா | 1,67,56,000 |
| மற்ற ஐரோப்பிய நாடுகள் | 1,82,02,000 |
| | 24,18,21,000 |
| பிரிட்டன் நாடுகள் | 5,09,18,000 |
| | 29,27,39,000 |

உதாரணமாக, விசாரணைக் குழு துஸ்மி என்ற இடத்தில் இருந்தபோது ஒரு நிமிஷத்தில் ஒரு பாதிரிக்கு ஜினீவாவிலிருந்து 60,000 ரூபாயும் அமெரிக்காவிலிருந்து 90,000 ரூபாயும் வந்ததாம். இந்த மாதிரி அநேக பாதிரிகள் கணக்கற்ற தொகைகளைப் பெற்றுச் சமயப் பிரசாரம் செய்துவருகிறார்கள். இந்த வகையில் வெளிநாட்டுப் பணங்களைப் பெற்று வேலை செய்யும் பாதிரிகளில் மத்தியப் பிரதேசத்தில் மட்டும் 480 பாதிரிகள் வேலை செய்கிறார்கள். அவர்களை நாட்டு வரிசையாகக் கூறினால்,

| | |
|---|---|
| அமெரிக்கா | 236 |
| பிரஞ்சு | 59 |
| பிரிட்டன் | 54 |
| ஸ்வீடன் | 32 |
| டச்சு | 29 |

| | |
|---|---|
| ஜெர்மன் | 17 |
| ஸ்விஸ் | 16 |
| பெல்ஜியம் | 13 |
| ஏனையோர் | 24 |
| | 480 |

சிறுசிறு நாடுகளிலிருந்தும் பாதிரிகள் வந்திருக்கிறார்கள். என்னே மத மோகம்!

மத்திய பிரதேசத்தில் மட்டும் 480 பாதிரிமார்கள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி ஆகியிருந்தால் இந்தியா முழுவதிலும் எத்தனை பாதிரிமார்கள் வேலை செய்கிறார்கள். எண்ணிப் பார்க்கவும். நமது தமிழ்நாட்டில் எத்தனை பேர்கள் என்று நாம் நினைத்தும் பார்த்தோமா? எத்தனை பணம் வந்தது என்று கணக்கிட்டோமா? கிணற்றுத் தவளைகளாக நாம் வாழ்கின்றோம். சம்பந்தர் அப்பர் போன்ற பெரியார்கள் இப்போது இருந்தால் இவ்வாறு வாளா இருப்பார்களா?

சில கனவான்கள் நம்மிடையே இருந்துகொண்டு "நாம் ஏழைகள் நமக்குப் பணம் ஏது?" என்கிறார்கள். ஆனால் அவர்களுக்குத் தெரியாமலேயே அந்தப் பாதிரிமார்களுக்குப் பல வகையிலும் உதவிபுரிகிறார்கள். தங்கள் சிறு குழந்தைகளைத் தமது சமய ஞானம் புகட்டாமல் கான்வெண்டுகளுக்குப் பெருமையென்று எண்ணி அனுப்பி வைத்து இளம் உள்ளங்களைக் கெடுத்து வைக்கிறார்கள். இவர்கள் அக் கான்வெண்டுகளுக்குக் கொடுக்கும் அபரிமிதமான பணம் உதவி அல்லவா? நமது நாட்டில் ஒரு பணக்காரர் தமிழ்க் கல்லூரிக்கு ஒரு பைசாவும் கொடுக்காமல் மறுத்துவிட்டு கிறிஸ்து கான்வெண்டுக்கு ரூ. 2500 கொடுத்தார். இந்த வகையில் எத்தனையோ கோடி பணங்கள் பிற மதப் பிரசாரத்திற்கு நாமே கொடுத்து வருகிறோம்.

நன்றாக ஊன்றிப் பார்த்தால் வெளிநாட்டிலிருந்து வரும் பணத்தைக் காட்டிலும் அதிகமாகப் பணம் நமது சமயத்தார்களே மத மாற்றத்திற்குச் செலவழிக்கிறார்கள். இது என்ன பேதைமை! மேலும் நமது சமய உண்மைகளைத் தாமும் அறியாமல் தம் மக்களுக்கும் தாராமல் பிற

மதக் கொள்கைகளை இளமை வயதிலேயே புகட்ட விடுகிருர்கள். இதனுல் ஏற்படும் தீங்கு இன்னது என்று இவர்கள் நினைப்பதும் இல்லை.

" மென்கால் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகம் கொள்ளத்தான் போனுற் போல் "

நமது செல்வர்கள் தங்கள் மக்களாகிய இளமை உள்ளங்களை பிறநாட்டுக் காகங்கள் பறிக்க விடுகிருர்கள். நாமும் பார்த்துக்கொண்டே விழிக்கின்ருேம். என்னே பேதைமை! என்னே அறியாமை! என்னே இழிவு! இந்நிலைமைதான் சமயப் பொறைக்கு இலக்கணமோ?

---

# 'அரும்பெறல் மரபிற் பெரும்பெயர்'

(புலவர் - முருகவேள், பி. ஓ. எல்.)

" பெயரில் என்ன இருக்கிறது? 'தாமரை' என வழங்கப் பெறுவதனை, நாம் வேருெரு பெயராற் குறிப்பிடினும், அஃது இனிய நறுமணமே கமழும்" என "ரோமியோவும் ஜூலியத்தும்" என்னும் நாடகத்தில் சேகப்பிரியர் பாடுகின்ருர். ஆயினும் சில சில பெயர்களுக்கு ஏதோ ஒரு தனிப்பெருமை இயல்பாக அமைந்து விடுகின்றது!

காந்தியடிகள் இராம்-இரஹீம் என்னும் கடவுட் பெயர்களினிடையில் தாம் எத்தகைய வேறுபாடும் காணவில்லை எனப் பலகாற் கூறி வந்தனராயினும், அவருக்கு இராம நாமத்தில் இயல்பாகவே ஒருவகைப் பற்றுதல் இருந்தது! பேராயிரம் பரவி வானேர் ஏத்தும் பெருமானையே, "சிவன் எனும் நாமம் தனக்கே யுடைய செம்மேனி அம்மான்" எனத் திருநாவுக்கரசர் சிறந்தெடுத் துரைக்கின்ருர்; "சிவன் எனும் ஓசை அல்லது உலகில் திருநின்ற செம்மை யுளதே?" எனவும் வியந்து வினவுகின்ருர். ஆசிரியர் நக்கீரரோ, முருகனை "அரும்பெறல் மரபிற் பெரும் பெயர் முருக!" எனப் பாடிப் பரவுகின்ருர்!

பெயர்களுக்குள்ள பெருமை பெரிது! வினைச்சொற்களை இலக்கண ஆசிரியர்களின் படிமம் (The Grammarians idol) என ஓர் அறிஞர் (P. B. Ballard) குறிப்பிடு

கின்றார். அம்முறை பற்றிக் கூறலுறின், பெயர்ச்சொற்களை இலக்கண ஆசிரியர்களின் தெய்வம் (deity) என்றே கூறலாம். ஒரு மொழியில் பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுமே உயிர்ப்புடைய பகுதிகள் (The living elements of language) என்பது மொழிநூலோர் கருத்து. ஆதல் பற்றியே, ஆசிரியர் தோல்காப்பியனார் "சொல்லெனப் படுப பெயரே வினைஎன்று, ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே" என மொழிந்தருளினர். அவர் வினைச்சொற்களினும் பெயர்ச்சொற்களுக்கே முதன்மை தந்துள்ளமை கருதற் பாலது.

ஒவ்வொரு பெயர்க்கும் தனித்தனியே ஒரு குறிப்பிட்ட பண்பு இருப்பதாகப் பழங்கால மக்கள் நம்பி யிருந்தனர். தாம் அடைய விரும்பும் பண்புகளுக்கு ஏற்ற பெயர்களை வைத்துக்கொள்ளும் பழக்கம் இன்றும் மக்களிடையே இருந்து வருகின்றது. ஒருவரின் பெயரை மற்றொருவர் வைத்துக்கொள்வதனால் அவரது பண்புகளைத் தாமும் பெறலாம் என மக்கள் கருதினர். அதனால் பாட்டனின் பெயரைப் பேரனுக்கு வைத்து வழங்கும் பழக்கம் உலகெங்கணும் தொன்றுதொட்டுப் பல மொழியாளரிடையிலும் பயின்று வந்துள்ளதென ஆட்டோ யெஸ்பர்ஸன் என்னும் அறிஞர் விளக்குகின்றார். கடவுளரின் பெயர்களை வைத்து வழங்குவதும் இக் கருத்துப் பற்றியே. சில சில மக்கட் குழுவினருள் தத்தம் தலைவனின் பெயரை மற்றவர்கள் வைத்துக் கொள்ளக்கூடாது எனத் தடைகளும் விதிக்கப்பட்டிருந்தன. தலைவன் மாறுந்தோறும் பெயர்களைப் பற்றிய தடைவிதிகளும் அவர்களிடையே மாறிக்கொண்டு செல்லுமாம். பெயர்களுக்கு ஒருவகை மந்திர சக்தி இருப்பதாகப் பழங்கால மக்கள் உறுதியாக நம்பி யிருந்தனர். தம்முடைய பெயரை மற்றவர்கள் தெரிந்துகொண்டால், அதனைக் கொண்டு, தமக்கு ஏதேனும் தீங்கு விளைத்துவிடுவார்கள் என்ற பயம் பண்டைய மக்களுக்கு இருந்தது. "ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லாதே" என்று இன்றும் வழங்கி வருவதை நாம் கேட்கின்றோம்.

ஒருவருக்குப் பெயர் இடுவதிற் பலதிற வகைகள் உண்டு. வறுமையினால் வாடும் பெற்றோர்கள் தம் குழந்தையாவது வறுமையின் கொடுமையில் இருந்து தப்பி வாழ்தல்

வேண்டும் என விரும்பிச் 'செல்லப்பன்' 'கோடீசுவரன்' எனப் பெயர்கள் வைப்பதுண்டு. இங்ஙனம் வைக்கப்படும் பெயர்கள் அதற்கு மறுதலையாக முடிவதும் இயல்பே. அதனை விளக்குதற்கு இனிய நல்ல எடுத்துக்காட்டு 'உமாயூன்' என்னும் துருக்க அரசனின் பெயராகும். 'உமாயூன்' என்றால் அதிருஷ்டசாலி என்பது பொருள். ஆயின் அவரைப் போன்ற துரதிருஷ்டசாலிகளான அரசர்கள் மிகச் சிலரேயாவர். ஒரு சில பெற்றோர்கள் தம் குழந்தைகளுக்கு நேர்ந்த பிறவிக் குறைபாடுகள் குறித்து வருந்தி அவற்றின் நிறைவை யுணர்த்தும் பெயர்களை வைத்துப் பரிவுடன் வழங்குவர். விழியிற் பழுதடைந்த தமது பிள்ளைக்குக் 'கண்ணப்பன்' எனப் பெயர் வைத்தார் ஒரு சைவத் - தமிழ்த் தந்தையார்! அதிவீரராம பாண்டியன் வரதுங்கராம பாண்டியன் ஆகிய இருவருக்கும் ஆசிரியராகத் திகழ்ந்தவரும், ப்ரங்கிரிப் புராணம் சேதுப்புராணம் பாடியவரும், சிவஞானசித்தியார் சுபக்கம் திருவருட் பயன் என்னும் சைவ சித்தாந்த நூல்களுக்கு உரை வரைந்தவரும் ஆன நிரம்ப அழகிய தேசிகர் இத்தகையதோர் எதிர்மறை இலக்கணை முறையில் (Lucus a non lucendo), "நித்த மணாளர் நிரம்ப அழகியர்" என்னும் திருவாசகத் தொடரால் பெயரிடப் பெற்றவரே என்று சான்றோர்கள் கூறுவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் கல்வியறிவு சிறிதும் பெறாத திண்ணனாரைக் "கலைமலிந்த கண்ணப்பர்" எனவும், கண்ணொளியிழந்தவராய் இருந்த தண்டியடிகளை "நாட்டமிகு தண்டி" எனவும், சூழ்ச்சியினாற் கொலையுண்டு தோல்வி எய்திய மெய்ப்பொருள் வேந்தரை "வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருள்" எனவும் சிறப்பித்துப் போற்றி யிருக்கும் திறமும் ஈண்டைக்கு உணரத் தகுவனவாம்.

செயின்ட் தாமஸ் அக்வினஸ் என்பவர், பொருள்களின் இயற்கைத் தன்மைகட்கு ஏற்பவே அவற்றின் பெயர்கள் இருத்தல் வேண்டும் (The names must be in accordance with the nature of things) என வலியுறுத்திக் கூறுவார். அஃது இந்நாளிற் பெரும்பாலும் பொருந்தி வரவில்லை. ஆயினும் புகழனர், மாதினியார், மருள்நீக்கியார், திலகவதியார் போன்ற பழந்தமிழ்ப் பெயர்கள், அவர்களின்

இயல்பான சிறந்த பண்புகளுக்கு ஏற்ப அமைந்து திகழ்ந் தமை கருதற்பாலது.

மேலும், ஒரு பொருளின் பெயரைத் தெரிந்துகொள் வது, அப்பொருளைப் பெறுதற்கும், அதன்மீது ஆட்சி யுரிமை செலுத்துதற்கும் வாய்ப்பளிக்கும் என மனித மனம் முன்னாளில் கருதியது. (To know the names of things, in fact, is to hold them in one's power.) பொருள்களின் பெயர்களை அறிந்துகொள்ளும் வேட்கை யானது, பொதுவாக இன்றும் எல்லா மக்களிடையிலும் இயற்கையாக அமைந்து கிடப்பதனை நாம் பலதுறைகளி லும் காணலாம். "முன்னம் அவனுடைய நாமம் கேட் டாள்" எனவும், "...பிறையாளன் திருநாமம் எனக்கொரு கால் பேசாயே" எனவும், "இன்னும் பாடுக பாட்டே! அவர் நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே!" எனவும் தமிழிலக்கியங்களில் வரும் பலப்பல பாடல்கள் இவ்வுண் மைக்குச் சான்று பகரும். ஆர்லண்டோ என்பவன், ரோசலிண்ட் என்னும் தன் காதலியின் பெயரைக் காட்டில் மரங்களிலெல்லாம் செதுக்கிவைத்த (As you like it) கதையை நாம் நன்கறிவோம்.

திருவாரூர்ப் பூங்கோயிலில் "கற்பகத்தின் பூங் கொம்போ! காமன்றன் பெருவாழ்வோ!" எனத் தக்க ஓர் அம்மையாரை நற்பெரும்பான்மை கூட்ட நம்பியாரூரர் காண்கின்றார்; என் மனங்கொண்ட இவ்விளங்கொடிதான் யார்? என வினவுகின்றார்; அதற்கு அன்றங்கு முன் நின்றார் "அவர், நங்கை பரவையார்" எனக் கூறினர். பரவையார் என்னும் பெயரைக் கேட்ட அளவில், நம்பியா ரூரர் நனிமிக மகிழ்ந்தார். பரவை-பரவை என அப் பெயரையே பலகாற் சொல்லிச் சொல்லி இன்புற்று, அவ் வம்மையார்பாற் கழிபெருங் காதல் கொண்டார்.

"பேர்பரவை! பெண்மையினிற் பெரும்பரவை விரும்பல்கு
லார்பரவை! அணிதிகழும் மணிமுறுவல் அரும்பரவை!
சீர்பரவை ஆயினாள்! திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை! இடைப்பட்ட என்ஆசை எழுபரவை!"

எனவரும் பெரிய புராணச் செய்யுள், அவர்தம் காதல் மன நிலையைக் கவினுறப் படம் பிடித்துக் காட்டுகின்றது!

இனி, நட்புணர்வின் உரிமை மிகுதியால் நண்பனின் பெயரையே தம் பெயராகக் குறித்துக் கொள்ளும் வியத்தகு செய்தியும்

" இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்
புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே !
தன்பொய் கிளக்குங் காலை, ' என்பெயர்
பேதைச் சோழன் !' என்னும் சிறந்த
காதற் கிழமையும் உடையன் !"

என வரும் புறநானூற்று (216)ப் பாடலாற் புலனாகின்றது. இத்தகு நட்பின் அருமைப் பெற்றியினை நினைக்குங்கால், " அண்டமோர் அணுவாம் பெருமை கொண்டு, அணுவோர் அண்டமாம் சிறுமை கொண்டு, அடியேன் உண்ட ஊண் உனக்கு ஆம்வகை எனது உள்ளம் உள்கலந்து எழு பரஞ்சோதி " என்னும் திருவிசைப்பா நம்மனோர் நினைவிற்கு இயைபுபற்றிப் போந்து இன்புறுத்துகின்றதன்றோ ?

சங்க காலப் புலவர்களின் பெயர்க் காரணங்களை ஆராய்ந்தால், பலதிறச் சுவைமிக்க கருத்துக்களை நாம் அறிந்து மகிழலாம். சைவப் பேரறிஞர் சாத்தூர் கந்தசாமி முதலியார் அவர்கள், உயிரின் இலக்கணம் விளக்கும் கருத்துடன், " ஐயூர் மூலங்கிழார் " என்னும் சங்க காலப் புலவரின் பெயரைத் தற்குறிப் பேற்றமாகத் தலைப்பெய்து வழங்கியுள்ளார். அஃதொன்றே அவர்தம் நுண்மாண் நுழைபுலனை விளக்கப் போதியதாகும். இதுபோன்ற சுவைமிகும் வழக்காறுகள் பிறவும் சில உண்டு. அவைகளெல்லாம் அறிஞர்கட்கு ஆராப் பெருவிருந்தாவனவாகும்.

பெயருக்குள்ள இத்தகைய பெருமைகளை யெல்லாம் விளக்குதற்கே, அதனை " அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் " எனச் சான்றோர் பண்டே அதனைச் சிறப்பித்துரைத்தனர் போலும் ! ஜே. வென்ட்ரியே என்னும் மொழி நூலறிஞர், பெயர்ச்சொற்கள் பற்றி விளக்கிவருங்கால், நோயின் கூறுகளை நுனித்தாய்ந்து அதன் பெயர் இன்னது எனத் தெளிந்து, மருத்துவர் ஒருவர் கூறிவிட வல்லுநராயின், அஃதொன்றே நோயாளியின் அச்சமும் கவலையும்

நீக்கி ஆறுதல் அளித்து நோயைப் போக்கிவிடக்கூடும் என்கின்றார்......(To know the name of the evil is half the cure. Let us not smile at these primitive beliefs. They are still in force today, since we believe in the importance of the diagnosis when it is expressed in words. 'I suffer a great deal with my head, doctor——it is Cephalalgia' 'My digestion is bad——it is dyspepsia!' In actual fact, the doctor is content to substitute for a usual and commonplace word that all his patients understand; they experience relief directly they learn that the specialist knows by name the occult evil that causes their sufferings.) இக்கருத்தை மெய்ப்பிக்க அதர்வ வேதத்திலிருந்து மேற்கோள் ஒன்றையும் அவர் காட்டுகின்றார்.

இஃதொருபுறம் இருப்பச், சில சமயங்களில் நோயாளிகளின் நோய் தணியப் பிறவற்றைக் காட்டிலும், மருத்துவர்களின் பெயர்ப் பெருமையும் சிறந்ததொரு காரணமாக அமைகின்றது என்பதனையும் நாம் பலகாற் கண்டுணர்ந்து வருகின்றோம். அவ்வுண்மையினை ஆசிரியர் சேக்கிழார் பெருமான் ஓரிடத்திற் செவ்விதின் உணர்த்தியருள்கின்றார். பாண்டியன் வெப்புநோய் கண்டு வருந்துகின்றான். சமணர்கள் மருங்கு சூழ்ந்து, நோயின் மூலநெறி அறியாதே, "காவாய் அருகனே! அருகனே" என்றென்றோதி, மருத்துவங்கள் புரிகின்றனர். ஆயினும் நெய்சொரிந்த தழல் போலப் பாண்டியனின் வெப்புநோய் மிகுகின்றதே யன்றித் தணியவில்லை. அதனால் அவர்களை நோக்கி அரசன் "ஒருவரும் இங்கு இருமருங்கும் இராதுபோம்" எனச் சினந்து மொழிந்து உணர்வு சோர்ந்து விழுந்தான். அந்நிலையிற் குலச்சிறையார்,

"காயமும் மனமும் மாசு கழுவுதல் செய்யார் செய்யும்
மாயமும் இந்த நோயை வளர்ப்பதே! வளர்வெண் திங்கள்
மேயவே ணியர்பால் ஞானம் பெற்றவர் விரும்பி நோக்கில்
தீயஇப் பிணியே அன்றிப் பிறவியும் தீரும் என்றார்."

உணர்வு சோர்ந்து உயிர்தடுமாறும் பாண்டியனின் செவிகளில், குலச்சிறையார் சிறந்த ஒரு மருத்துவரின் பெயரை

மெல்லெனச் சொல்லியவுடனே, அதுகேட்ட அளவில் அவன் சோர்வு நீங்கி உணர்வு பெற்றின்புறுகின்றான். நோயின் கொடுமையும் ஓரளவு தணிகின்றது. இந்நிலைமையினை;

"மீனவன் செவியின் ஊடு மெய்யுணர் வளிப்போர் கூற,
ஞானசம் பந்தர் என்னும் நாமமந் திரமும் செல்ல,
ஆனபோ தயர்வு தன்னை அகன்றிட......"

என ஆசிரியர் சேக்கிழார் விளக்கியருள்கின்றார். பாண்டியனின் அயர்வு நீங்கியது; நீங்கியமைக்குக் காரணம் ஞான சம்பந்தர் என்னும் பெயரைக் கூறக் கேட்டமை; கூறக் கேட்ட அளவில் நோயின் கொடுமையை நீக்கியது ஞான சம்பந்தர் என்னும் பெயர்; எனவே, அது வெறும் பெயர் அன்று! தன்னை நினைத்து வழுத்தினாரைக் காக்கவல்லதொரு பெருமந்திரம் அது. இக்கருத்தினை வலியுறுத்தவே "ஞானசம் பந்தர் என்னும் நாம மந்திரம்" எனச் சேக்கிழார் அதனைச் சிறப்பித்துரைக்கின்றார்.

இங்ஙனமே, திருநாவுக்கரசர் நம்பியாரூரர் என்னும் திருப்பெயர்களும் மந்திரச் சிறப்பு வாய்ந்தனவாய்த் தம்மை நினைத்து வழுத்தினாரைக் காக்கும் பேராற்றல் மிக்க பெற்றிமை சான்றவை என்பது உணரற்பாலது. "திருநாவுக்கரசு எனும் ஓர் சொற்றான் எழுதியும் கூறியுமே என்றும் துன்பில் பதம் பெற்றான் ஒரு நம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே" எனவும், "நாளும் நம்பி ஆரூரர் நாமம் நவின்ற நலத்தாலே ஆளும்படியால் அணிமாதி சித்தியான அணைந்தார்" பெருமிழலைக் குறும்பர் எனவும் சான்றோர்கள் கட்டுரைத் திருத்தல் கடைப்பிடிக்க. இத்துணை அருமை பெருமை வாய்ந்து, தொன்றுதொட்டுச் சான்றோர்களாற் புகழ்ந்து போற்றி ஓதப்பெற்றுவரும் பெயர்களை "அரும்பெறல் மரபிற் பெரும்பெயர்" எனக் குறிப்பிட்டுச் சிறப்பித்துப் போற்றுதல் பொருந்துவதேயாகும் அன்றோ?

---

# கண் கண்ட தெய்வம்

**க. தியாகராாசன்**

இப்பரந்த பூவுலகின்கண்ணே இறைவனே வழிபடுகின்ற முறை இரு பாங்கில் அமைந்துள்ளது. அவற்றுள் ஒன்று உருவ வழிபாடு. ஏனையது அருவ வழிபாடு. உருவ வழிபாடு எளியதும் ஆபத்தில்லாததும் ஆகும். ஆனல் அருவ வழிபாடோ கடினமானதும் ஆபத்து நிறைந்ததும் ஆகும். வழிபாடு என்ற சொல் வழிபடுதல் என்ற வினையின் அடியாகப் பிறந்ததாகும். எனவே வழிபாடு என்ற சொல்லுக்குப் பொருள் வழியிற் செல்லுதல்; அதாவது மெய்யுணர்ந்தோர் காட்டிய நன்னெறியில் ஒழுகுதலே வழிபாடாகும். அந்நெறியில் செல்லுவதால் ஆரா அமுதமாய், தெவிட்டாச் சுவையாய் எவ்விடத்தும் எப்பொழுதும் எக்காலத்தும் மூவாத முழு முதலாய் எல்லாம் வல்ல அருட்பெருஞ் சோதியின் தண்ணருளைப் பெற்று இன்புற்று வாழ ஏதுவாகும்.

உலகம் உய்விக்கத் தோன்றிய அருட்பெரியார் அனைவரும் இறைவனின் திருவருள் நிழலின் கீழ் வாழ்ந்தவரும் வாழ்பவரும் ஆவர். மக்கள் யாவரும் மெய்யடியார் என்பதைத் தெளிவாக அறிந்து இணைந்து வாழ வழிகாட்டுகின்ற பெருமக்கள் நமக்குக் கண்கண்ட தெய்வம் ஆவர்.

பற்றற்ருன் பற்றினைப் பற்றி வாழும் முறை பெருவாழ்வாகும். கருவுற்ற நாள் முதலாகப் பிள்ளைப் பருவம் நீங்கும் வரை தாயானவள் தன் சேயைச் சீராட்டி, பாராட்டி, நல்லவனய் வாழ மிகப் பரிந்து பால் நினைந்தூட்டி வளர்க்கின்ருள். தாயன்புக்கு ஈடு பிறிதொன்றில்லாத அவ்வன்னையும், கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கத்தில் சிறந்து விளங்கிப் பெருவாழ்வு பெற்று நல்வழியில் பிறழாமல் தன் மகனை ஒழுகும்படிச் செய்கின்ற தந்தையும் கண்கண்ட தெய்வமாவார்.

ஔவையாரும் கொன்றைவேந்தனில் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்றும், 'தாயிற் சிறந்த கோயில் இல்லை' என்றும், 'தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை' என்றும் கூறியவாற்ருல் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் கண்

கண்ட தெய்வம் யாவர் என்பதை எளிதில் உணரலா மன்றே !

தாய் தந்தைமூலம் ஒருவன் பெறும் அறிவைவிடப் பன் மடங்கு தெளிந்த பேரறிவை யாவரும் பெறுவது ஆசிரிய ரிடமே. அவ்வாசிரியரே மாணவரை நல்வழிப்படுத்துகின்ற வரும் உலகறிந்த அனைத்தையும் ஒழியாது உணர்த்துகின்ற வரும் ஆவர். "எழுத்தறிவித்தவன் இறைவனுகும்" என்றுர் நறுந்தொகை ஆசிரியர். அவரே நித்திய அநித்தியப் பொருள்களின் தன்மையை விளக்கி, அறியாமை மரத்தை வேரறவே வெட்ட அறிவாகிய வாளினை உண்டாக்கு பவரும் ஆவர். அதனுல் தோன்றி அழிகின்ற பொருள் களின் நிலையாமையை யுணர்ந்து, அப்பொருளால் அழியாப் பொருளைத் தன்னகத்தே பெற்று வாழும் பகுத்தறிவு அல்லது மெய்யுணர்வினை உடையவர்களாகின்றேம். இப்பெரு நிலையை யாவரும் அடையவேண்டுமானுல் ஆசானிடம் நம்பிக்கையும் அவருரைத்த வாசகத்தில் நல்ல நினைப்பும், அப்பயனை அடைய மேற்கொள்ளும் நெறியில் இடைவிடா முயற்சியும்இருந்தால் ஞானமடைந்து இன்புற்றுவாழலாம்.

கண் கண்ட தெய்வமாய் தாய், தந்தை, ஆசிரியர் ஆகிய மூவரும் விளங்குவதை யுணர்ந்தும் பயன் கருதாமல் மிகப் பரிந்து உதவி செய்வதனையுணர்ந்தும் அவர்கள் கூறும் பொருண்மொழிகளைப் போற்றி, பணியாற்றி வந்தால், மனவொருமை ஏற்பட்டு பொய், பொருமை நீங்கி வாய்மை, தூய்மை யுண்டாகும். அதனுல் எங்கும் இன்பமே சூழ எல்லோரும் வாழ ஏதுவாகும்.

---

# முன்னேறுகிறேமா ?

**அழகுமதியன்**

இக்கேள்வி பொதுவாக உலகமக்களைப் பொறுத்தும் சிறப்பாக ஒரு நாட்டு மக்களைப் பற்றியும் கேட்கப்படுகிறது. இதற்குச் சிலர் உடன்பாட்டிலும் சிலர் எதிர்மறையிலும் விடை சொல்லுகிறுர்கள். மகாபாரதம் அக்காலத்து மக்கள்

வரலாறு கூறும் நூல். நம் நாட்டு மக்களுக்குத் தெரிந்த உலகத்தைக் கூறும் நூல். நாடு 56 தேசங்களாகப் பிரிக்கப் பட்டிருந்தது. அவற்றில் சீனு, கம்போடியா, பாரசீகம் முதலியவைகளும் அடங்கி இருந்தபடியால், அக்காலத்தில் அறிந்த உலக வரலாற்றையே அது கூறுவதாகும். அது துவாபர யுகத்தின் சரித்திரம் கூறுவது. அதன் இறுதிப் பகுதியில் துவாபரயுகம் கழிந்துபோய்க் இனி கலியுகம் தொடங்குகிறது. அறம் (தருமம்) மறைந்து மறம் (அதர்மம்) தோன்றும் என்று கூறுகிறது. அக்கொள்கைக்கு உவமை யாக தரும தேவதையான பசுவிற்கு நான்கு கால்கள் உண்டு. முதல் யுகத்தில் அப்பசு நான்கு கால்களால் நடந் தது. இரண்டாம் யுகத்தில் (திரேதாயுகம்) மூன்று கால் களால் நடந்தது. தற்போதைய துவாபர யுகத்தில் இரண்டு கால்களால் நடக்கிறது. இனி வரும் கலியுகத்தில் ஒரு காலால் நொண்டிக்கொண்டு போகும் என்று உவமிக் கிறது. அதற்கு உதாரணமாக இதுவரைக்கும் மக்கள் நீதி நெறியோடு நடந்தார்கள். இனிமேல் நீதி கெட்டு துரா சாரத்தில் நடப்பார்கள் என்று சொல்லி அதில் ஒரு காட்சி யாக ஒரு கணவன் தன் மனேவியைத் தோள்மீது எடுத்துக் கொண்டு தன் தாயைக் காட்டுவழியே நடத்திச் செல்வதா கக் கூறுகிறது. இதனுல் அறியப்படுவது என்னவென்றுல், நீதியுடன் வாழ்ந்த உலகம் கலியுகம் பிறந்தவுடன் நெறி கெட்டுப்போகிறது என்பதாகும். இதுவே புராணக் கோட்பாடு.

அதே புராணங்கள் வேறொரு கொள்கையையும் வெளி யிட்டிருக்கின்றன. சிறப்பாக வைணவ புராணங்கள் அவதாரங்களே எடுத்துக் கூறுகையில் உயிர்களின் வளர்ச்சி நிலேயைக் கூறுகின்றன. மீன், ஆமை, பன்றி, நரசிங்கம், வாமனம், மூன்று இராமர்கள், கண்ணன், கல்கி என்ற முறையில் தாழ்ந்த உயிரினிலிருந்து உயர்ந்த உயிர்வரை படிப்படியாக ஏறிச் செல்லும் உயிரினம். இந்த முறை யையே திருவாசகமும் " கல்லாகி மரமாகி......தேவராய் " என்று வளர்ச்சி தத்துவத்தைக் கூறுகிறது. ஆகவே இந்த மண்ணுலகில் உயிரின் பண்பாடு படிப்படியாக முன்னே றிக்கொண்டே செல்லுகிறது. இதே உண்மை என்று மேல் நாட்டாரும் கூர்தல் முறை (Evolution) என்று கூறி

அதனை ஒரு தனி இயலாகவும் வகுத்துப் பெருக்கியிருக்கிறார்கள்.

இந்த இரண்டு கொள்கைகளும் நமது நாட்டில் உலாவி வர எதனை நம் பெரியோர்கள் சான்றுகள் மூலமாக நிரூபிக்கின்றார்கள் என்பதை இனிப் பார்ப்போம் :

முதலில் புராணக் கதைகளில் சில கூறுவோம். சத்திய யுகத்தில் சத்தியமே காட்டப்பட்டதா ? அல்லது அந்த நாளில் அசத்தியமும் காட்டப்பட்டதா ? சிறிது ஆராய்ந்தால் அரிச்சந்திரன் ஒருவனைத் தவிர வேறு பிரமுகர்கள் உண்மையைக் கடைப்பிடித்தார்களா ? விசுவாமித்திரன் செயல்கள் எத்தனை வஞ்சனையைக் காட்டுகின்றன. கொலைகளும் அநியாயத் தீர்ப்புக்களும் கபடம் அறியாத பெண்மணிகள் படும் துன்பங்களும் என் அக்காலத்தில் ஏற்பட்டன. அப்படியாயின் அந்தக் காலம் எவ்வாறு உண்மை யுகம் ஆயிற்று.

இரண்டாவதான திரேதாயுகம் எவ்வாறு விளங்கிற்று? மந்தரை, கைகேயி முதலியோர் வஞ்சனைகளும், தசரதனின் காமக் தன்மையும், அரக்கர்களின் கொடுமைகளும், அரசியலில் மக்களும் அரக்கர்களும் வானரர்களும் காட்டிய பேராசைகளும் தூய்மையான நிலையைக் காட்டுகின்றனவா ? தற்காலத்துக் கலியுகத்தில் உள்ள ஆசாபாசங்களைவிட திரேதாயுகம் எந்த நிலையில் சிறந்தது ? ஆராய்க.

இனி மூன்றும் யுகமான துவாபர யுகம் எத்தனை சீர்கேடான நிலையைக் காட்டுகிறது. தாயாதிச் சண்டைகள், கொலைச் சூழ்ச்சிகள், காதல், காமம் இவைகளுக்காகத் திருட்டுகள், சோரங்கள், சகுனி முதலியோரின் வஞ்சனைகள், கெடுதல் தெரிந்துகொண்டும் பெரியவர்கள் அந்தக் கட்சியை ஆதரித்தல், தீ வைத்தல், கொலை புரிதல், கொள்ளையடித்தல், பெண்களைக் கற்பழித்தல், நனமை ஒழித்துத் தீமையைப் போற்றுதல், நிலத்தின்மீதும் பொன்னின்மீதும் பேராசைகொள்ளல், அதற்காகச் செய்யத்தகாத வஞ்சனைச் சூழ்ச்சிகள் செய்தல் இவைகள் எல்லாம் நிரம்ப இருக்கும். ஆனால் அந்த யுகம் தற்போதைய யுகத்தைவிடச் சிறந்ததா ?

மேலும் கலியுகம் மிகக் கொடுமையான யுகம் என்று கூறப்படுகிறது. உண்மையில் இது சரியா? நாட்டில் மக்கட் கல்வி, ஒழுக்கம் இவைகள் எப்போது சிறப்பு அடைந்திருக் கின்றன ? மிகச் சிறந்த கவிகளும் புனித மக்களும் சமயா சாரியர்களும் எப்போது தோன்றித் தூய வாழ்வை நிலை நிறுத்தினர்கள் ? மிகச் சிறந்த அருங்கலைகளை எப்போது தோற்றுவித்தார்கள். புத்தர், சினர், சூரதூத்தர், கன் பூசியஸ், ஏசுகிறிஸ்து, முகம்மது முதலியோர்கள் எப் போது தோன்றினர்கள் ? ஷேக்ஸ்பியர், தாந்தே, காளி தாசர் முதலிய கவிகள் எப்போது பாடினர்கள் ? கலியுகம் எந்தவகையில் முந்திய யுகங்களுக்குத் தாழ்ந்துவிட்டது ? ஆராயுங்கள்.

ஆகவே புராணங்களைக் கொண்டே சிறந்த காலத்தி லிருந்து தாழ்ந்த காலத்திற்கு உலகம் செல்லுகின்றது என் பதை மறுக்கலாம். அதற்கு மாருகத் தாழ்ந்த நிலையிலிருந்தே நல்ல நிலைக்கு உலகம் செல்லுகிறது என்று நிரூபிக்கலாம். இந்தக் கொள்கையையே அவதாரங்களும் மணிவாசகனர் உறுதிச் சொல்லும் வற்புறுத்துகிறது என்று கூறலாம்.

பிறநாடுகள் மிகத் தாழ்வான நிலையிலிருந்து சென்ற சில நூற்ருண்டுகளில் முன்னேறிவிட்டன. தற்போதும் முன்னேறிக்கொண்டு வருகின்றன. இந்து நாட்டிலும் கல்வி, செல்வாக்கு, தொழிற் சிறப்பு, அரசியல் பேறு இவைகளில் முன்னேறிக்கொண்டே வருகின்றது. அடிமை வாழ்வில் வாழ்ந்த நாமும் தற்போது அந்தத் தளையை விட்டு முன்னேறிவிட்டோம். இனி விரைவில் சகல கலைகளிலும் முன்னேறுவோம்.

தமிழ் நாட்டிலே கலை, சமயம் இரண்டும் சில மக்க ளிடைதான் பரவியிருந்தது. தற்போது அவைகள் முன் னேறிப் பொதுமக்களிடைப் பரவி வருவதை நன்கு அறிந்து கொண்டு வருகிருேம். சித்தாந்தம் இன்னதென்று அறியா மல் மக்கள் இருந்த காலம் உண்டு. தற்போது சமயப் பிரசாரத்தினல் பொதுமக்கள் தத்துவஞானத்தை அறியத் தொடங்கியிருக்கிருர்கள். ஆகவே நாம் முன்னேறி வருகின் ருேம் அல்லவா ?

---

# திருமுருகாற்றுப்படை சைவ சித்தாந்த விளக்கமே

வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார்

(மலர் - 30 ; இதழ் - 4 ; 128-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்ஙனமெல்லாம் தம்மை அலங்கரித்துக் கொண்டமையால் பெற்ற பேரழகைப் பிறரெல்லாம் காணுமாறு விளையாடத் தொடங்குகின்றார்கள். அவ்விளையாட்டு எத்தகையது என்னின்? விளாமரத்தின் சிறிய தளிரைக் கிள்ளி ஒருவர்மேல் ஒருவர் அத்தளிர் படுமாறு தெறிப்பதுதான்! திண்மையான பந்து முதலியவற்றை ஒருவர்மேல் எறிந்தால் அது தப்பாமல் அங்ஙனமே படுதல் எளிது. மெல்லிதாய இவ்விளவின் இளந்தளிர் விரலால் தெறித்தால் தப்பாமல் பிறர்மேல் படுவது என்பது அரிதேயாம். பிறர்மேல் பட்டுழியும் ஒருசிறிதும் துன்புறுத்தாது இன்புறுத்தும். இவ்வரிய விளையாட்டையே அத்தெய்வ மகளிர் தேர்ந்து கொண்டார்கள். அவ்வாறு அவர்கள் தெறித்த அவ்விளந்தளிர், தாம் நினைந்தாங்குப் பிறர்மேல் பட்டவுடன், "முருகனுடைய கோழியோங்கிய வெற்றிக்கொடி நெடிது வாழ்வதாக" என அத்தெய்வ மகளிர் பலரும் ஒருங்கே கூடிக்கொண்டு சிறப்புடன் விளங்கும் மலைப்பக்கமெல்லாம் எதிரொலி எழுமாறு பாடிக்கொண்டு மகிழ்ச்சியால் சோலையில் ஆடுகின்றார்கள்.

அத்தெய்வ மங்கையர் ஆடுதற்கிடமான சோலையால் சூழப்பட்டுளது மலை; அதன்கண் மந்தியும் ஏறியறியாத அவ்வளவு உயர்ந்த மரங்கள் அடர்ந்திருக்கின்றன. அத்தகைய மலையில் காந்தள் பூத்திருக்கின்றது. அக்காந்தள் முருகனுக்கு உரிமை பூணும் தெய்வத்தன்மை யுடைமையால் அதில் வண்டுகள் மொய்ப்பதே யில்லை. அத்தகைய காந்தள் மலர்கொண்டு கட்டிய பெரிய தண்ணிய கண்ணியைச் சூடிய சென்னியனாக விளங்குகின்றான் முருகன் எனச் சிறப்பிக்கின்றார் புலவர்.

காந்தட் கண்ணியைக் கூறுமுகத்தால் முதுபெரும் புலவர், புலவர்க்குக் காட்டிய இந்த முதற் காட்சியில் அழ

கிற்கே எல்லையாக விளங்கும் ஒளியுருவங்களைக் காண்கின்றோம். அன்பின் அகலத்தைக் காண்கின்றோம். அத்தெய்வ மகளிர் விரும்புவதும் அணிவதும் எல்லாம் உயர்ந்த நறுமணப் பொருள்களே. அம்மணப் பொருள்களையும் முருகனால் கொடுக்கப்பட்ட மேனி முருகனை விளக்குவதற்காகவே விரும்புகின்றார்கள். தனித்து இன்புறாமல், பலர் திரண்டு ஆடிப்பாடி மகிழ்கின்றார்கள். இதனால் பலரோடும் பகையின்றிப் பயிலும் அன்பின் உயர்வை யுடையவர்கள் அவர்கள் என்பது விளங்கும். விளவின் தளிர்களைக் கிள்ளித் தெறித்த சாலத்தில் தெறிக்கப்பட்டவர்கள் தப்பி ஓட முடியாமையால் தோற்றவர்களே யாயினும், வென்றவர்கள் மகிழ்ந்தாடும் முருகாட்டத்தில் மகிழ்ச்சியுடன் கலந்து கொள்கின்றார்கள். இதனால் அவர்தம் பகையற்ற நகையுள்ளத்தின் தகையினைக் காணலாம். தாம் எறிந்த விளவின் தளிர் பிறர்மேல் தப்பாமல் பட்டது, தம் திறமையால் நிகழ்ந்த செயலே யாயினும் தம் செயல் என்று தருக்கி மகிழாமல் ' அவனன்றி ஓரணுவும் அசையாது ஆதலின் ', ' அம்முருகனுடைய அருளே உள்நின்று ஊக்கமளித்தது ' என்று எண்ணி அவனுடைய வெற்றிக்கொடியை வாழ்த்திப் பாடுகின்றார்கள். அக்கொடியே முன்பு தம் கணவர்க்கும் தமக்கும் வாழ்வளித்தது என்பதை நன்குணர்ந்தவர்கள் அல்லரோ ? தம் செயல் என்பதொன்று இன்றி எல்லாம் இறைவன் செயலே என்று கொள்ளும் கொள்கையுடையாரே இறைவன் இன்னருளைப் பெறுதற்குரியராவர். " நஞ்செயலற்றிந்த நாமற்ற பின் நாதன் செயல்தானே என்றுந்திபற, தன்னையே தந்தானென்றுந் தீபற" என்னும் அநுபவ ஞானியின் வாக்கும் காண்க.

விளையாட்டாகத் தெறித்த விளவின்தளிர், பிறர்மேல் பட்ட செயலையே முருகன் செயல் என்று எண்ணும் இச்சூரர மகளிர், தாம் செய்யும் எச்செயலையும் தம் செயலாக எண்ணாமல் அம்முருகன் செயலாகவே எண்ணுவர் என்பது தேற்றம். எனவே அவர்கள் தம் செயலற்றுத் தாம் எனும் தருக்கற்று விளங்கிய தூய ஞானமுடையவர்களே என்பது நன்கு விளங்கும். இவர்களுடைய இவ்வுயர்வு கருதியே புலவரும், இவர்கள் உறுப்புக்களைக் கூறும் வழிப் பாதாதி கேசமாக முறைப்படுத்தி யிருக்கின்றார் என்பதும் நோக்கி

உணர்க. முதலில் இவர்கள் திருவடிகளைக் காண்பவர்களும் உயர்நலம் எய்தலாம் என்பது அவர் கருத்து. மண மிக்க காந்தளங்கண்ணி, மணப்பொருளில் விருப்பமிக்கவரும் முருகன்பால் அயரா அன்புடையவரும் ஆகிய சூரர மகளிர் சார்புடையதாகக் கூறியது சாலப் பொருத்தமுடைய தாகும் இச் சூரர மகளிர் வருணனையால், உயர்ந்தவர்கள் முருகன் திருவருளைப் பெற்று வழிபடும் தன்மை யுணர்த்தி ஞர். அரமகளிர் மனிதரினும் உயர்ந்தோராதல் காண்க.

## 7. பேய் மகள்

இனி, இச் சூரர மகளிரோடு முற்றிலும் முரண்பட்ட பேய்மகள் காட்சியை உணர்த்துகின்ருர். புலவர் கூறக் கருதியது வேற்படையையே யாயினும் புலால் நாறும் அவ் வேற்படைக்கும் புலால் விரும்பும் பேய் மகட்கும் தொடர் பிருத்தலின் உடன் விளக்குகின்ருர். “பூமியைச் சூழ்ந்த தண்ணிய கடல் நிலைகுலையும்படி உள்புகுந்து அவுணர் களுடைய நல்ல வலிமை அடங்குமாறு கீழ்நோக்கிக் கவிழ்ந் தலர்ந்த பூங்கொத்துக்களையுடைய மாமரத்தை வெட்டின வேலால், குதிரை முகமும் மனித யாக்கையும் ஆய இரு வகையான உருவினையுடைய ஒரு பெரிய சூரபன்மாவின் உடம்பு அற்று வேறு வேறு ஆம்படி அச்சம் உண்டாக நெருங்கி அவ்வவுணர் தலைவனைக் கொன்ற குற்றமற்ற வெற்றியினையும், ஒருவராலும் அளந்தறிய இயலாத நல்ல புகழினையும் உடைய செவ்வேற் சேய்” என முருகப் பெரு மானுடைய பகைவரை அழிக்கும் ஆற்றலை வேலோடு சேர்த்துப் புகழ்கின்ருர் புலவர்.

முருகன் வேலால் சூரபன்மாவைக் கொன்றகாலத்துப் பேய்மகள் அரக்கர் பிணங்களின் நிணமுண்டு செருக்கிப் பாடி ஆடி மகிழ்கின்ருள். அவள் உறுப்புக்களைக் கேசாதி பாதமாகப் புகன்று செல்லுகின்ருர் புலவர். அப் பேய்மகள் கூந்தல் எண்ணெய் பூசப்படாமையால் உலர்ந்து பறந்து கொண்டு இடர்கின்றது. அவள் வாய் அங்காந்தபடி யிருக் கின்றது. அதில் பற்கள் நிரல் படவின்றிக் கொட்டியும் மேழியும் கோத்துவைத்தாற் போன்று காணப்படுகின்றன. அவள், கோபத்தால் சுழலும் கருவிழிகளையுடைய பசிய கண்ணுல் அச்சமுண்டாகப் பார்க்கின்ருன். அவள் காது

களில் உள்ள பிதுங்கிய கண்ணையுடைய கோட்டானும் பாம்பும் மார்பில் வந்து தொங்குவதால் அவள் பெரிய கொங்கைகளில் தாக்கி வருத்துகின்றன. அவள் உடம்பு வழவழப்பும் பளபளப்பும் இன்றிச் சருக்கரையுடையதாகக் காணப்படுகின்றது. அவள் நடையோ கண்டவர்கள் அஞ்சுமாறு கடுமை மிக்கதாக இருக்கின்றது. இவ்வாறு எல்லாவற்றாலும் கண்டவர் அஞ்சத்தக்க அப்பேய் மகள், முருகன் வெற்றிகொண்ட போர்க்களத்தில் முடைநாற்றமுடைய கரிய தலையைக் கையில் ஏந்திக்கொண்டு குருதி தோய்ந்த கூரிய நகங்களையுடைய வளைந்த விரலாலே, அத்தலையிலுள்ள கண்களைத் தோண்டி யுண்கின்றாள். அசுரர்க்கு அச்சம் உண்டாகுமாறு முருகன் வெற்றிகொண்ட போர்க்களத்தைப் பாடியவண்ணம் தோளை அசைத்துக்கொண்டு நிணத்தைத் தின்றுகொண்டே துணங்கைக் கூத்து ஆடுகின்றாள். பேய்மகள் இங்ஙனம் துணங்கை ஆடுமாறு சூரபன்மாவைக் கொன்ற செவ்வேற் சேய் என்று இயைபு படுத்துகின்றார் புலவர்.

இப் பேய்மகள் உருவம், அருவருக்கத்தக்க உருவம்; அஞ்சத்தக்க உருவம்; அவள் விரும்புவது புலால் நாற்றத்தையே! அவள் பாடுவதும் புலால் வீசும் போர்க்களத்தையேயாம் இப் பேய்மகள் காட்சியோடு சூரர மகளிர் காட்சியை யொப்பிட்டுப் பார்த்தால் இரவுக்கும் பகலுக்கும் உள்ள வேறுபாடு காணப்படும். அரமகளிர் அழகிற்கு எல்லையாக விளங்குகின்றனர். இப் பேய்மகள் கோர உருவிற்கு எல்லையாக விளங்குகின்றாள். அவர்களைக் காண மகிழ்ச்சி பொங்கும்; இவளைக் காண அச்சம் விஞ்சும். அரமகளிர் காதில் அணிந்தது கறிய அசோகந் தளிர்; பேய்மகள் காதில் அணிந்தவை புலால் வீசும் கோட்டானும் பாம்புமேயாம். அரமகளிர் பலராகத் திரண்டு விளையாடி மகிழ்கின்றார்கள்; பேய்மகள் தனித்துப் புலால் உணவால் வயிறு நிரப்பி மகிழ்கின்றாள். அரமகளிர், தாம் தெளித்த தளிர் பிறர்மேற்படச் செய்வது தம் செயலே யாயினும் அது முருகன் அருளால் ஆயிற்றென அவன் கோழிக் கொடியை வாழ்த்துகின்றார்கள். இப் பேய்மகளோ தன் முயற்சி யேதுமின்றி முருகன் தன் வேல் கொண்டு கொன்று குவித்த நிணத்தைத் தின்னும்போதும், அவ்

வேலையோ முருகனையோ வாழ்த்தாது நிணம் கிடந்த களத்தையே பாடுகின்றாள். மகிழ்ச்சியால் ஆடுகின்றாள். இக்காட்சி இரண்டானும் பெரும் புலவர் அறிவிப்பது யாது என்பதை நோக்குவோம்.

இறைவன் எல்லாவுயிர்கட்கும் உள்ளீடாய் நின்று எச்செயலையும் செய்விக்கின்றான் என்றுணர்ந்து வழிபடும் நல்லறிவுடைய மேலோர்க்கும், இறைவன் நினைவேயின்றி வயிறு நிரப்புவதையே பெருநோக்கெனக் கொள்ளும் புல்லறிவுடைய கீழ்கட்கும் ஒப்பவே அருள் செய்கின்றான் என்ற உயர்ந்த கருத்தையே சூரரமகளிர் இயல்பாலும் பேய்மகள் இயல்பாலும் அறிவித்துள்ளார். இறைவன் அருள் செய்வதில் வேற்றுமை இன்மையும் அவன் அருளுதவியைப் பெறும் ஆன்மாக்களிடையே வேற்றுமை மிகவுண்மையும் காட்டியவாறு. தரை நம்மைத் தாங்குகின்றது என்னும் உணர்ச்சியுடையோரையும் தரையின் உதவியறியாது தாமே திரிவதாக எண்ணும் புல்லரையும் வேறுபடுத்தாது தாங்கும் தரைபோல, இறைவன், தன்னுதவியையறிந்து வழிபடுவோர்க்கும், அறியாது செருக்குவோர்க்கும் ஒப்பவே அருள் செய்கின்றான். அவனருள் உதவியையறிந்து வழிபடுவோர் உயர்ந்தோராதலும், அவனுதவியை அறியாது கண்டதே காட்சியெனக் கருதுவோர் தாழ்ந்தோராதலும் கண்கூடு.

அரமகளிர், உயர்ந்தோங்கிய கோழிக் கொடியை வாழ்த்தலும், பேய்மகள் தான் கண்ட தாழ்ந்து கிடக்கும் புலால் வீசும் போர்க்களத்தைப் பாடுதலும் அவரவர் பெருமை சிறுமைகளை யுணர்த்துதல் காண்க. வேண்டுவார் வேண்டுவனவே ஈவது இறைவன் இயல்பாகலின் சூரரமகளிர் விரும்பிய விளையாட்டு வெற்றியையும், பேய்மகள் விரும்பிய புலாலுணவையும் கொடுத்தருளி, இருதிறத்தாரையும் நிறைவு படுத்துகின்றான். விருப்பம் உயிர்களுக்குள்ள உரிமையே யன்றி இறைவனுரிமை யன்று. விரும்புவதற்குரியன உயிர்கள்; கொடுப்பவன் இறைவன். உயர்வும் தாழ்வும் உயிர்களின் விருப்பத்திற்கேற்றவாறு பொருந்தும். சூரரமகளிர் விருப்பம் உயர்ந்த உயிருணர்ச்சியாகிய வெற்றியிலும், பேய்மகள் விருப்பம் தாழ்ந்த உடலுணர்ச்சியாகிய பசி நீங்குதலிலும் இருந்தன என்பதை யோர்க. அர

மகளிர் உயர்ந்தோராதலும் பேய்மகள் இழிந்த பிறப்பினளாதலும் வெளிப்படை. உலகில் உயர்ந்தோர்க்கும் இழிந்தோர்க்கும் எடுத்துக்காட்டாகவே அரமகளிரையும் பேய்மகளையும கூறினார். அரமகளிர் தொழுதற்குரிய பெருமையுடையவர் என்பதை அறிவிக்க அவர்கள் உறுப்புக்களைப் பாதாதிகேசமாகக் கூறியிருத்தலும், பேய்மகள் அதற்குரியள் அல்லள் என்பதை யறிவிக்க அவளுறுப்பைக் கேசாதி பாதமாகக் கூறியிருத்தலும் காண்க. பேய்மகளடியை விளங்கக் கூறாது, " உருகெழு செலவு " என்று தொழிலால் உணருமாறு கூறியொழிந்தமையும், " கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடி " எனச் சூரரமகளிர் அடியைச் சிறப்பித்துள்ளமையும் காண்க.

வீடுபெற விழையும் புலவர் செல்லும் வழியில் அரமகளிர் போன்ற உயர்ந்தோரையும், பேய்மகள் போன்ற இழிந்தோரையும் காண்டல் கூடும். காணின் அவ்விருதிறத்தார்க்கும் ஒப்ப அருள் செய்யும் முருகப்பெருமானது அருட்பெருமையை நோக்குவதல்லது, உயிர்களின் பெருமை சிறுமைகளைப் புகழ்ந்தும் இகழ்ந்தும் காலங்கடத்தல் ஆகாது என்பதையும் குறிப்பால் அறிவித்துள்ளார் புலவர் என்பதை நுனித்துணர்க. சூரரமகளிர் வாழ்வின்மூலம் உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாளின் பெருமையையும் சூரபன்மாவின் வீழ்வின்மூலம் செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கையின் பெருமையையும் விவரித்தவாறு நோக்குக.

முருகனுடைய இயல்பை இங்ஙனம் பொதுவகையால் கூறிய சிவன்முத்தராம் பெரும்புலவர், சிறப்பு வகையால் அவன் நிலைகளைக் கூறுமுன் அவன் அருளைப்பெறுவது உறுதி என்பதை யுணர்த்த வேண்டுவது இன்றியமையாததாகும். ஆகவே அதனை முன்னர் அறிவிக்கின்றார்.

" செவ்வேற் சேஎய்
சேவடி படரும் செம்மலுள்ள மொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
செலவுநீ நயந்தனை யாயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே "

என்கின்றார். " நலம்புரி கொள்கைச் செம்மலுள்ளமொடு புலம்பிரிந்துறையும் சேய் சேவடி படரும் செலவு நீ நயந்தனையாயின் " என மாறுக. " நல்வினைகளே முற்பிறப்பில் செய்த கொள்கையுடைமையால் தலைமை அமைந்த உள்ளத்தால், பாசஞானத்தைப் பிரிந்து தங்குவதற்குரிய முருகப் பெருமானுடைய சேவடிக்கண் செல்லும் செலவை நீ விரும்பினையாயின் நல்ல நெஞ்சத்தின் இனிய விருப்பங்கள் பலவும் ஒருங்கே வாய்ப்ப நீ நினைத்த பயனை இப்பொழுதே பெறுவாய் " என்பது பொருள்.

செம்மல் - தலைமை. நல்வினையே செய்துவந்த காரணத்தால் உள்ளம், செம்மல் உள்ளம் எனப்பட்டது. ஒரு கருவிப்பொருளது; ' ஊசியொடு குயின்ற தூசும்பட்டும் ' என்புழிப்போல. ' உள்ளத்தால் செலவுநீ நயந்தனையாயின் ' என இயைக்க. சேவடிக்கண் செல்லுதல் வேண்டும் என்ற விருப்பம், பல்பிறவியிலும் செய்த புண்ணியத்தானன்றி உண்டாகாதாகலின் ' நலம்புரி கொள்கைச் செம்மலுள்ளத்தால் சேவடி படரும் செலவு நீ நயந்தனையாயின் ' என்றார். ' புலம்பிரிந்துறையும் சேவடி எனச் சேவடியின் இயல்பு விளக்கினார். புலம் என்றது பாசஞானத்தை. உயிர், பொறிகளால் சுவையொளியூறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலங்களை நுகரும் நுகர்ச்சி விருப்பமே பாசமாதலின் அப்பாசத்தைப் ' புலம் ' என்ற பெயரால் கூறினார். " அடல்வேண்டும் ஐந்தன்புலத்தை" (343) என்று வள்ளுவரும் கூறுமாறு காண்க.

" சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து "

(சிவஞானபோத - வெ - 51)

என மெய்கண்டாரும் பாசஞானத்தைப் ' புலனுணர்வு ' எனக் கூறியது காண்க.

உலகப் பற்றினைப் பற்றாது சேவடியடைய எண்ணிய காரணத்தால் நெஞ்சம், ' நன்னர் நெஞ்சம் ' எனப்பட்டது. பற்றற்றான் பற்றினைப் பற்றும் நசையாதலின் ' இன்னசை ' எனச் சிறப்பிக்கப்பட்டது. ' விரையார் மலர்தூவிப் பூண்டு இடப்பதென்று கொல்லோ ' எனவும், " அமுதின் சுவையைப் புல்லிப் புணர்வதென்று கொல்லோ " எனவும்,

"பணிந்து பாதப் பூப்போதணைவ தென்று கொல்லோ" (திருவா - புணர்ச்சிப்பத்து) எனவும் அடியார்க்குத் தோன்றும் இன்னசை பலவாதலின் 'இன்னசை பலவுடன் வாய்ப்ப' என்றூர். 'முன்னிய வினை' என்புழி 'வினை' ஆகுபெயராய்ப் பயனை உணர்த்தி நின்றது. சீவன் முத்தராம் பெரும் புலவர் கூறிய வழியில் சென்று வழிபட்டால் சேவடிப் பேற்றைப் பெறுவது உறுதியாகலின் 'இன்னே பெறுதி' எனத் துணிந்து கூறினர். சேவடி சேர நினைந்து வினவிய புலவரின் பக்குவநிலையை யறிந்து கூறியதாகும்.

புலம் பிரிந்துறையும் சேய் சேவடி என்றமையால், சேயோனாகிய இறையைப் பாசமணுகா தென்பதும், 'புலம் பிரிந்து' என்றமையால் 'பாசம்' உண்டு என்பதும் அப்பாசத்தோடு கூடிய உயிர் அதனைப் பிரிந்தாலன்றிச் சேவடி சேர முடியாதென்பதும் 'புலம் கெட்டு' என்னாது 'புலம் பிரிந்து' என்றமையால் பாசம் நித்தியம் என்பதும் முத்தியிலும் மும்முதலுண்டு என்பதும் விளங்குதல் காண்க. இக்கருத்துக்கள் யாவும் சைவ சித்தாந்தத் தெளிவே என்பதைக் கூறவும் வேண்டுமோ?

இங்ஙனம் கூறக் கேட்ட வீடு விரும்பின புலவன், அப்பரமன் யாண்டு யாண்டு உளன்? அவன் இயல்புகள் என்னை? அவனை வழிபடும் முறை யாது? என வினவ அவாவுதல் இயல்பாதலின் அம்முருகப் பெருமான் இனிதுறையும் இடங்களையும் அவ்விடங்களோடு சேர்த்து அவன் நிலைகளையும் அவனை அந்நிலைகளில் வைத்து வழிபடும் அடியவர் வழிபாட்டு முறைகளையும் உணர்த்தத் தொடங்கி முதற்கண் திருப்பரங்குன்றத்து முருகன், உலகத்திற்கு வேறாய் நிற்கும் பரநிலையை அறிவிக்கின்றூர்.

## 8. திருப்பரங்குன்றம்

திருப்பரங்குன்றத்தைத் தெரிவிக்க வந்த புலவர், துங்கச் செந்தமிழ்ச் சங்கம் நிலைபெற்றிருந்த சிறப்பானும், ஈண்டிய புகழுடைய பாண்டியன் ஆண்டிருந்தாண்டுவரும் பெருமையாலும் எல்லோராலும் நன்கறியப்படுவது மாடமலிந்த மதுரையே யாதலின் அதனை முற்கூறி அதன் மேற்றிசையில் உள்ளது திருப்பரங்குன்றம் என்று கூறியுள்

ளார். பாண்டியன் போரை விரும்பிச் செய்து வெற்றி பெற்று எடுத்துக்கட்டிய நீண்ட கொடிகள், வானளாவிய மதுரை மாநகர்க் கோபுரத்தில் அசைந்தாடிக் கொண்டிருக்கின்றன. இன்னும் சிறிது அணுகி நோக்கினால், வரிந்து புனைந்த பந்தும் பாவையும் அக்கோபுர வாயிலில் தொங்கிக் கொண்டிருக்கின்றன. கொடிகள் கட்டுவது வெற்றிக்கு அறிகுறி என்பர் ; இப்பந்தும் பாவையும் தொங்கவிட்டிருப்பது எதற்கு என்பதைக் காண்போர் உய்த்துணர வேண்டியுளது. பாண்டியன், எதிர்த்துவரும் மன்னர்களை மடவார் போல வலியிலராகக் கருதுகின்றமை தோன்ற அவர்கள் விளையாடவெனப் பந்தும் பாவையும் தொங்கவிட்டிருக்கின்றான். பந்தும் பாவையும் கொண்டு ஆடுதல் மடவார் செயல். அம்மன்னர்கள் அவ்விளையாட்டிற்கே யுரியர் என இழிவுபடுத்தியவாறு. இப்பந்தும் பாவையும் கண்டவுடன் பாண்டியன் வலிமை யுணர்ந்து போர் செய்ய வருவோர் இலராயினர். எனவே அவ்வாயில் போரில்லாத அமைதி மிக்க வாயிலாக விளங்குகின்றது. அவ்வாயிலின் உள் நுழைந்து பார்த்தால் பல்பொருள் நிறைந்த செல்வக் கடைத்தெரு காணப்படுகின்றது. அதன் செல்வ நிலையை நோக்குவார்க்குச் செல்வத்திற்குரிய திருமகளே அங்கு வந்து வீற்றிருக்கின்றாள் என்றுதான் தோன்றும். இத்தகைய கடைத் தெருவைக் கடந்து சென்றால், மாடங்கள் நிறைந்த பெரிய தெருக்கள் காட்சியளிக்கின்றன. இவற்றையெல்லாம் காணுங்கால் அங்கு வாழும் மக்கள் வீரமிக்க செங்கோல் வேந்தனாகிய பாண்டியனால் பகையின்றிப் பசியின்றி மகிழ்ந்து வாழ்கின்றார்கள் என்பது விளங்குகின்றது.

இத்தகைய பெருமை வாய்ந்த மதுரைக்கு மேற்றிசையில் விளங்குகின்றது திருப்பரங்குன்றம். அக்குன்றத்தின் அருகே கரிய சேற்றினையுடைய அகலமான வயல்கள் காணப்படுகின்றன. அவ்வயலில், முள் நெருங்கியுள்ள தண்டினையுடைய, வாய் விரிந்து மலர்ந்த தாமரை மலர்கள் காட்சியளிக்கின்றன. அம்மலரில் வண்டுகள் மாலைக் காலத்துத் தங்குகின்றன. இரவு வந்தவுடன் அத்தாமரை மலர்கள் குவிந்துவிடுகின்றன. வண்டுகள் வெளிவர வியலாது அம்மலரினுள் உறங்கிவிடுகின்றன. சிறிது ஒளியுடைய

வைகறைக் காலம் வருகின்றது; குவிந்த மலர் சிறிது விரிகின்றது; உறங்கிய வண்டுகள் விழித்து வழி காண்கின்றன; பறக்கின்றன. அண்மையில் தேன் பொருந்திய நெய்தல் மலரைக் காண்கின்றன. குவியும் நிலையிலுள்ள அம்மலரில் ஊதித் தேன் அருந்துகின்றன. ஆனால் தமக்கு வேண்டிய அளவு தேன் கிடைக்கப் பெறவில்லை. அந்நிலையில் பகலவன் தோன்றிவிடுகின்றான். எங்கும் ஒளிமயமாக விளங்குகின்றது. குறைபடு தேன் அருந்திய வண்டுகள் உயரப் பறக்கின்றன. திருப்பரங்குன்றத்தின் உச்சிக்குச் செல்கின்றன. அங்கு அழகிய சுனை காணப்படுகின்றது. அதில் கண் போல் மலர்ந்த அழகிய தாமரை மலர்கள் காணப்படுகின்றன. அம்மலர்களில் தங்கி இன்ப மகிழ்ச்சியால் அகஞ் சிறையையுடைய அவ்வண்டுகள் ஆரவாரிக்கின்றன. அவ் வண்டுகளின் ஆரவாரத்திற்கு இடமாக விளங்குகின்றது பரங்குன்று. அப்பரங்குன்றத்தில் முருகப்பெருமான் மனம் விரும்பித் தங்குதற்குரியன் என்று உணர்த்தினர் பெரும் புலவர்.

திருப்பரங்குன்றத்திற்கு அடையாக வண்டுகளின் செயல்களையே கூறியுள்ளார். முருகன் இயல்பு யாதும் கூறவில்லை. வண்டுகள், வயலில் உள்ள தாமரையில் இரவில் உறங்குகின்றன. வைகறையில் விழித்து நெய்தல் மலரில் உள்ள குறைபடு தேனை விரும்பிப் பருகுகின்றன. விடிந்த பின் உயரப் பறந்து சென்று மலையுச்சியிலுள்ள சுனை மலரில் தங்கி இன்ப ஒலி எழுப்புகின்றன. "உறங்கின; நுகர்ந்தன; ஒலிக்கின்றன" என்று சுருக்கமாகக் கூறலாம். முருகப்பெருமான் விரும்பித் தங்கும் திருப்பரங்குன்றத்திற்கு இவ்வண்டுகளின் செயலைக்கொண்டு புலவர் உணர்த்தக் கருதியே சிறந்த பொருள் வேறு உண்டு என்பது இப் பகுதியைக் கூர்ந்து நோக்கும் கூர்த்த மதியினர்க்கு நன்கு விளங்கும்.

முன்னரே தோற்றுவாய் செய்துள்ளபடி இறைவனுடைய மூவகை யியல்புகளில் உலகத் தொடர்பின்றித் தனித்து நிற்கும் பரநிலை யுடையனாக முருகன் திருப்பரங்குன்றத்தில் வீற்றிருக்கும் தன்மையை யுணர்த்துவதே புலவர் உட்கோளாதலின் அதற்கேற்பவே இவ்வண்டின் செயலை அடையாகக் கூறியிருக்கின்றார். பின்வரும் திருச்

சீரலைவாயில் அறுமுகமும் பன்னிருகையும் உடைய முருகன் உருவத்தைக் கூறும் புலவர், இங்கு முருகன் உருவ நிலையைப் பற்றி யாதும் கூறுது "அமர்ந்துறைதலும் உரியன்" என்று மட்டும் கூறியிருத்தல் காண்க. இதனுல் தத்துவங் கடந்து நிற்கும் அருவநிலையாகிய பரநிலையை யுணர்த்திஞர் என்பது பெறப்படும். பின்னர், "அலைவாய்ச் சேரலும், ஆவிநன்குடி யசைதலு முரியன்" என்று கூறுபவர், இங்குக் "குன்றமர்ந் துறைதலு முரியன்" என, 'அமர்ந்து' என்னும் அடையைச் சிறப்பாகப் புணர்த்தியுள்ளார். அமர்தல் விரும்புதல். இதனுல் ஏனைய இடங்களினும் திருப்பரங்குன்றத்தில் முருகன் தங்குதற்கேற்ற தகுதி மிகுதியாக அமைந்திருத்தல் வேண்டும் என்பது புலப்படும். அச்சிறப்பு தானும் தன் சிறப்பியல்பாகிய தத்துவங் கடந்த பரநிலைக்குத் தக்கவாறு அமைந்திருத்தல் வேண்டும். அத்தகைய சிறப்புத் திருப்பரங்குன்றத்திற்குப் புணர்த்திய அடையால் புலப்படுகின்றதா என்பதை நோக்குவோம்.

ஆன்மாக்களுக்குக் கேவல நிலை, சகலநிலை, சுத்த நிலை என்ற மூன்று நிலையுண்டு என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. கேவல நிலை என்பது ஆன்மா, மலங்களோடு மாயையில் ஒடுங்கி அறிவின்றிக் கிடக்கும்நிலை. இதனை 'இருட் கேவலம்' என்றும் கூறுவர். 'சகலநிலை' என்பது, அவ்வான்மாக்களிடத்தில் வைத்த கருணையால் இறையருள் தநுகரண புவன போகங்களை யுண்டாக்கித்தர அவற்றைப் பெற்று அவ்வான்மாக்கள், சிறிது அறிவு தெளியப் பெற்று உலக போகங்களை நுகர்ந்து பிறந்திறந்துழலும் நிலை. 'சுத்த நிலை' என்பது, சகலத்தில் பெற்ற சிற்றறிவைப் பெருக்கித் தம்மையும் தம்முடைய தலைவனையும் உணர்ந்து மலமாசு கழிந்து பேரறிவுப் பொருளாகிய இறைவன் திருவடிகளில் இரண்டறக் கலந்து இன்புறும் நிலை. இது அருட் கேவலம் எனவும் கூறப்படும்.

திருப்பரங்குன்றத்திற்கு அடையாகப் புணர்த்த 'வண்டின் அரிக்கணம' என்றது ஆன்மாக்களை யுணர்த்தியது. "அவ்வண்டுகள் கரிய சேற்றில் வளர்ந்த தாமரை மலரில் இரவெல்லாம் உறங்கிக் கிடந்தன" என்றது, அவ்வான்மாக்கள், இருட்கேவல நிலையில் மாயையில் கட்டுண்டு அறிவு விளக்கமின்றி ஒடுங்கிக் கிடந்த நிலையை யுணர்த்தி

யது. வைகறைக் காலம் என்பது ஞாயிற்றினொளி சிறிது விளங்கும் காலத்தையே யாகும். வைகறைக் காலத்தில் வண்டுகள் நெய்தல் மலருக்குச் செல்லவேண்டுமாயின் இரவெல்லாம் வண்டுகளையுள்ளடக்கி மூடியிருந்த தாமரை மலர் சிறிதேனும் விரிதல் வேண்டும். இல்லையேல் வண்டுகள் தாமரையிலிருந்து புறம்போதல் இயலாது. தாமரையைச் சிறிதலர்த்திச் சிறிது ஒளியுண்டாக்குவது, வைகறையில் புலப்பட்டுத் தோன்றாத ஞாயிற்றின் செயலாகும்.

'ஞாயிறு, வைகறையில் தன் கதிர்களைச் சிறிதே தோற்றி இருளைச் சிறிது நீக்கித் தாமரையைச் சிறிதலர்த்தி வண்டுகட்கு விடுதலைதந்து கட்கமழ் நெய்தலைக் காட்டியது என்றது, இறைவன், தன் கருணையால் இருட்கேவல நிலையில் அறிவு மயங்கிக் கிடந்த ஆன்மாக்களை மாயையினின்றும் எடுத்து, உடம்பு முதலியவற்றை அவ்வான்மாக்களுக்குக் கொடுத்துச் சிறிது அறிவு விளங்கச் செய்தான் என்பதை யுணர்த்தியது. வண்டுகள், வைகறையில் நெய்தல் மலரிலிருந்த சிறிய தேனை நுகர்ந்தன என்றது, ஆன்மாக்கள், இறைவன் தந்த உடம்போடு தோன்றி அவன் காட்டிய போகத்தைத் துய்த்துக்கொண்டு உழன்றமையை யுணர்த்தும். இது, இருட்கேவல நிலையின் நீங்கிய ஆன்மாக்களின் சகலநிலை ஆகும்.

ஞாயிறு தோன்றிப் பகற் காலம் உண்டாகி எங்கும் விளக்கமடைந்தவுடன் நிலப்பரப்பிலுள்ள நீரில் மலர்ந்த நெய்தல் மலரிலுள்ள தினைத்தனை யுள்ளதோர் பூவினில் தேனையுண்டு கொண்டிராமல் வண்டுகள், பறந்து மலையுச்சிக்குச் சென்று அங்குள்ள சுனைமலரில் தங்கி இன்புற்று ஒலித்தன என்றது, ஆன்மாக்கள், இருவினைப் பயனாகிய போகம் நுகர்ந்து முடிந்தவுடன் இறைவன் தோன்றி மேல் நெறியெலாம் புலப்படுத்தியதையும், இறைவன் புலப்படுத்திய நெறியே சென்று சுத்தநிலை யடைந்து அவ் ஆன்மாக்கள், நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தோறும் எப்போதும் ஆனந்தத் தேன் சொரியும் செம்பொருளோடு இரண்டறக் கலந்து இன்புற்று மகிழும் நிலையையும் புலப்படுத்தும். இது சுத்த நிலை.

"பொன்வாள்முன் கொண்மூவில் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே எங்குமாம் தன்மைபோல்—முன்வாள்
மலத்துள் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணும்
மலத்திரித்துச் செல்லும் வரத்து" (சி. ஞா. போ. 73)

என மெய்கண்டார், ஆன்மாக்களின் மூவகை நிலையினை புணர்த்தி யிருத்தல் காண்க. இங்கு ஆன்மாவிற்குச் சூரியனை யுவமையாக்கியுள்ளார். நக்கீரர், முதலில் முருக னுக்குவமையாக ஞாயிற்றைக் கூறியதற்கேற்ப, ஈண்டும் இறைவனுக்குவமையாகவே கொண்டு வண்டுகளை ஆன் மாக்களுக்கு உவமையாக்கி யிருத்தல் பொருத்தமாகத் தோன்றுகின்றது.

"இருஞ்சேற் றகல்வயல் விரிந்து வாயவிழ்ந்த
முட்டாட் டாமரை துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்த லூதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கண மொலிக்கும்
குன்றமர்ந் துறைதலும் உரியன்"

என்பது காண்க. இங்ஙனம் இருட்கேவலத்திருந்த ஆன் மாக்கள் இறையருள் உதவியால் சகலநிலை யடைந்து பின் அச்சகல நிலையில் நீங்கிச் சுத்த நிலையை யடைந்து மகிழ் கின்றன. இத்தகைய சுத்தான்மாக்கள் சூழத் திருப்பரங் குன்றத்தில் முருகன், உயர்ந்த தன் பரநிலையில் விளங்கு கின்றான் என்பதை விளக்கியவாறு. சகல ஆன்மாக்கள் நிறைந்த உலகத்தைக் கடந்து விளங்குகின்ற இறைவன், சுத்த ஆன்மாக்கள் சூழ இருப்பதற்கு விரும்புதல் இயற் கையே யாதலின், அமர்ந்துறைதலும் உரியன்' எனச் சிறப் பித்தார் என்க.

அகப் பாட்டுக்களில், தலைவன் இயல்புகளைத் தோழியும் தலைவியும் வெளிப்படக் கூறாது அவன் நாட்டுக் கருப் பொருள்களைக் கூறி அவற்றின்மூலம் வெளிப்பட வைப்பது மரபு. இதற்கு 'உள்ளுறையுவமம்' என்று பெயர். கடவுள் வாழ்த்து ஆகிய இம் முருகாற்றுப்படை புறம் எனப்படும். புறப் பாட்டுக்களில் இவ்வாறு உவமையைக் கூறி உவமே

யத்தைப் பெறவைப்பது 'ஒட்டணி' எனப்படும். கருத்துடை யடைகொளியணி என்று கூறுவதுமுண்டு. புலவர், தாமுரைத்த இத்தகைய நுண்பொருளை யுணரும் ஆற்றல் உள்ளவனே தம் சொன்னெறியே சென்று செந்நெறி சேர்வான் என்பது கருதியே வெளிப்படக் கூருது இவ்வாறு உவமை முகத்தால் பெறவைத்தாராதல் வேண்டும். இறைவனுடைய மூவகை யியல்புகளில் முதன்மையதாய தானேயாம் பரநிலையை முதற்கண் உணர்த்தி யிருப்பதும் அப்பரநிலையில் முருகன் வீற்றிருத்தற்கு இடமாதல் பற்றிக் குன்றம் 'பரங்குன்றம்' எனப்படுவதும் பொருத்தமுடைத்தாதல் காண்க.

## 9. திருச்சீரலைவாய்

இனி, இரண்டாவதாகக் கூறுவது இறைவன் உலகமாய் நிற்கும் பருநிலையை. இந்நிலை, திருச்சீரலைவாயில் காணப்படுகின்றது. திருப்பரங்குன்றத்தில் அருவாய்க் கூறப்பட்ட முருகப்பெருமான் உருவத் திருமேனி தாங்கி அறுமுகமும் பன்னிருகையும் தொழில் செய்ய யானைமேற் கொண்டு திருச்சீரலைவாய்க்குச் செல்லுதலும் உரியன் என்பது இப்பகுதியின் சுருக்கம்.

முருகப்பெருமான் ஏறியுள்ள யானை எத்தகையது என்பதை முன்னர் உணர்த்துகின்றார் புலவர். கூரிய நுனியையுடைய அங்குசம் தாக்கியதால் உண்டாகிய வடுக்கள் நெற்றியில் ஆழ்ந்து காணப்படுகின்றன. உயர்ந்த இனத்து யானை என்பதை யுணர்த்தும் புள்ளிகளும் அந்நெற்றியில் விளங்குகின்றன. வாடாத பொன்னரி மாலை முகத்தில் தொங்கவிடப்பட்டிருக்கின்றது. அது, யானை செல்லுங்கால் நெற்றிப் பட்டத்தொடுங் கிடந்து அழகாக அசைகின்றது. அவ் யானையின் இருமருங்கும் உள்ள மணிகள் மாறி மாறி ஓசையை யெழுப்புகின்றன. அவ் யானை இயல்பாகவே விரைந்து செல்லும் நடையை யுடையது. யமனைப்போலப் பிறரால் தடுத்தற்கரிய வலியை யுடையது. செல்லத் தொடங்கினல் காற்று எழுந்து செல்வதுபோன்று விரைந்து நடக்கும் இயல்பினது. அத்தகைய உயர்ந்த யானையின்மேல் ஏறிக்கொண்டான் முருகப்பெருமான்.

(தொடரும்)

கள் வழிபாடும், 5 மணி முதல் 8½ மணி வரையில் கோயில் வழிபாடும் நடைபெற்றன. கோயில் வழிபாட்டுக் காலங்களில் எல்லாரும் நிம்மதியாக அமர்ந்து சேவிக்கலாம். வீண் சப்தம் இல்லை. திருப்புகழ் பாடப்படுகின்றது. இப்படிப்பட்ட அமைதியான வழிபாடு பிறகோயில்களிலும் நடைபெற்றால் நலமாக இருக்கும்.

24—4—57 புதன்கிழமை மாலை சென்னை இராயப்பேட்டை, ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் 'குகானந்த நிலையத்'தில் அப்பர் திருநாள் கொண்டாடப்பெற்றது. அதுபோழ்து சமாஜத் தலைவர் திரு. அ. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார்கள். உயர்திருவாளர்கள் - அம்பை சங்கரனார் அவர்கள் அப்பர் அடிகளது "ஞானப்பாடல்கள்" என்னும் பொருள் பற்றியும், நல் முருகேச முதலியார் அவர்கள் அப்பர் திருத்தாண்டகங்களைப் பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள். சமாஜச் செயலாளர் நன்றியுரையுடன் கூட்டம் நிறைவுபெற்றது.

28, 29—4—57 திருச்செங்காட்டங்குடிக் கோயில் விழா. மிகப் புகழ்பெற்ற இந்தத் தலத்தில் அரிய சொற்பெருக்குகள் நடைபெற்றன. ஆசிரியர் அதில் கலந்துகொண்டு சிறுத்தொண்டர் பெருமையைப் பற்றிப்பேசினார்.

2—5—57 வியாழன் மாலை சென்னைத் திருமயிலைக் கபாலீச்சுரத்தில் சமாஜத்தின் சித்திரைத் திங்கள் விழா நடைபெற்றது. நடைமுறை அடுத்த இதழில் வெளிவரும்.

——

## மதிப்புரை

சைவ சித்தாந்தம் (ஆங்கிலம்) :—ஆசிரியர் யாழ்ப்பாணம் கலைப் புலவர் க. நவரத்தினம், சிவத்தொண்டன் கழகம், யாழ்ப்பாணம். விலை ரூ. 1.50; பக்கம் 54. அரிய கருத்துக்களைக் கொண்ட ஒரு கட்டுரை. முன் கண்டி நகர் மெய்ஞ்ஞான மாநாட்டில் செய்த சொற்பெருக்கின் விரிவாக அமைந்தது. ஏழு பகுதிகளாக எழுதப்பட்டு உள்ளது. மனிதனுடைய இயல்பு, அவனுடைய தோற்றம், வாழ்வு, இறுதி, வீடு பேறு இவைகளைப் பற்றிச் சித்தாந்தம் கூறும் இயல்புகளைத் தெளிவாகக் கூறுவது. தக்க சான்றுகள் கொடுக்கப்பட்டுள்ளன. தமிழ் அறியாத மக்களுக்குச் சிறப்பாக மேல்நாட்டாருக்கு மிகவும் பயன்படும். சமயக் கொள்கைகளை அறிந்திராத நமது மாணவர்களுக்கும் பயன் தரும்.

Regd. M. 2330 "SIDDHANTHAM" Vol. 30—No. 5

## சைவ சித்தாந்த மகா சமாஜம்,

# பொன்விழா மலர்

மிக மிகக் கவர்ச்சியான வெளியீடு. இதில் ஐம்பத்தொரு கட்டுரைகள் உள்ளன. சமாஜத்தின் ஐம்பது ஆண்டுகளின் நிகழ்ச்சிகள் தெளிவாக எழுதப் பெற்றுள்ளன. ஐம்பதாண்டுகளில் நடந்த நிறைவு விழாக்களின் தலைவர்கள்; நடைபெற்றஇடங்கள்; மங்கையர் மாநாடு, இளைஞர் மாநாட்டு விவரங்கள்; சமாஜத் தொண்டர்கள் தொண்ணூற்றொருவர் பற்றிய குறிப்புக்கள்; உயர்திருவாளர்கள்: ஞானியார் சுவாமிகள், மறைமலையடிகள், ஜே.எம்.நல்லசாமிப்பிள்ளை, ஸர். பொன்னம்பலம் இராமநாதன், பொன்விழாத்தலைவர்கனம்சு. நடேசப் பிள்ளை, திரு.வி.க. முதலிய முப்பதின்மர் உருவப்படங்கள்; வேறு பற்பல சிறப்புக்கள் இதில் மிளிர்கின்றன. கட்டுரையாளர்களுள் டாக்டர் அ.சிதம்பரநாதன் செட்டியார், டாக்டர் வ. ஆ. தேவசேனபதி, தணிகைமணி ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராயப் பிள்ளை, சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார், சித்தாந்த சிகாமணி க. வச்சிரவேல் முதலியார், சித்தாந்த ரத்னாகரம் முத்து சு. மாணிக்கவாசக முதலியார், திரு. அ. மு. பரமசிவானந்தம் முதலியோர் உள்ளனர். இருநூற்று நாற்பது பக்கங் கொண்ட அழகிய பதிப்பு.

**விலை ரூபா ஒன்று.** ரிஜிஸ்தர் தபாற்கூலி அணா பன்னிரண்டு. உடனே முன்பணம் அனுப்பிப் பெற்றுக் கொள்க. வி. பி. மூலம் அனுப்பப்படமாட்டாது.

கிடைக்கும் இடம்:

**பாரி நிலையம்,** 59, பிராட்வே, சென்னை-1.

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D. Mangayarkarasi and V.K. Punithavathi Edited by C M Ramachandran Chettiar, B.A., B.L., and Published by S.Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhanta Maha Samajam, 2, Seetha Rama Nagar, Cuddalore N. T.